Regd No 2975

ஸ்ரீ

# ஸ்ரீராமாநுஜன்-374

ஆசிரியர்: P. B. அண்ணங்கராசாரியர், மஹாவித்வான்

# SRI RAMANUJAN

EDITOR:
Mahamahimopadhyaya
P. B. ANNANGARACHARYA, Kanchipuram-631503.

வருட சந்தா ரூ. 10 ஜீவித சந்தா ரூ. 25

...ளன் பெருந்தேவித் தாயார் திருவடிகளே சரணம்.



ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.



ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி — ஏழ்பாரு
முய்ய வவர்க ளுரைத்தவைகள் தாம்வாழி
செய்யமறை தன்னுடனே சேர்ந்து

சித்தார்த்தி ஸ்ரீ ஆனி—ஆடி

# ஸ்ரீ ராமாநுஜன் - 374



ஆசிரியர் : ஸ்ரீகாஞ்சீ மஹாவித்வான், P. B. அண்ணங்கராசாரியர்

தொகுதி 32 | சித்தார்த்தி௵ ஆனிமீ 1979௵ | பகுதி 2.

## பத்ராதிபப்ரதிநிதியின் அறிக்கைகள்

நமது ஸ்ரீராமாநுஜனுக்கு முப்பத்தொரு பிராயம் முடிவடைந்து முப்பத்திரண்டாவது பிராயம் சென்ற வைகாசி மாதத்தில் தொடக்கமாயிற்று. பத்திரிகைக்கு அதுவே வருஷாரம்ப மாதமாகும். அபிமானிகளுக்குப் புதிதாகத் தெரிவிக்க வேண்டியதொன்றுமில்லை. பழைய படி அனைவரும் ஆதரித்து வர வேணும். [உத்ஷவ விஷயங்கள்] தேவப்பெருமாளுடைய வையங் கண்ட வைகாசித்திருநாள் இனிது நடந்து முடிந்தது. இடையில் ஆழி மழைக்கண்ணன் சிறிதுகண் திறந்ததனால் விசேஷமாகத்தாபமில்லாமல் நடந்தேறியது. திருத்தேருத்ஸவம் மூன்றுநாள் நடைபெற்று நிலை சேர்ந்தபடியால் திருவோணத்தில் நடைபெறவேண்டிய அவபிரதம் பூரட்டாதியன்று நடைபெற்றது. ஸ்ரீமத்பரமஹம்ஸ. திருமலை திருப்பதி சிறிய கேள்வி ஜீயர் ஸ்வாமி யெழுந்தருளியிருந்து மங்களாசாஸனம் செய்தருளினது விசேஷம். அத்திவரதரைப்பற்றின விசேஷம் மேலே முடிவில் காணத்தக்கது. ... ... ... ... *



ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

# இன்னமுதவெள்ளக் கட்டுரைகள்

(பத்ராதிபரது சொற்பொழிவுகள்)

## .1 அம்ருதஸாகராந்தர் நிமஜ்ஜனம்.

ஸ்வாமியெம்பெருமானார் அருளிச்செய்த திவ்யக்ரந்தங்கள் நவநிதிகளென்றும் நவரத்னங்களென்றும் ப்ரஸித்தமானவை. அவற்றுள் ஸ்ரீவைகுண்ட கத்யத்தின் ஸமாப்திவாக்யம் அடியேனுடைய சிந்தனையில் நிச்சலுமுள்ளது. அதாவது * அம்ருதஸாகராந்தர் நிமக்ந ஸர்வாவயவஸ் ஸுகமாஸீத * என்பது. " அமுதக்கடலுள் அழுந்திய தனது ஸர்வாவயவங்களையு முடையனாக இனிதிருக்கக்கடவன் " என்பது இந்த வாக்கியத்தின் பொருள். பகவத் பாஷ்யகாரருடைய ஸ்ரீஸூக்திகளை அடியேன் ஆழ்ந்து நோக்கும்போது பலவிடங்களில் " இன்ன ஆழ்வாருடைய ஸ்ரீஸூக்தியை யடியொற்றி இங்ஙனே யருளிச்செய்கிறார் ஸ்வாமி " என்று ஆசார்ய கடாக்ஷவிசேஷத்தினால் அடியேனுக்குத் தோன்றுவதுண்டு. மேலேகுறித்த * அம்ருதஸாகராந்தர் நிமக்நேத்யாதி ஸ்ரீஸூக்தி எந்த ஆழ்வார் பாசுரத்திலிருந்து அவதரித்தது? என்று ஆராய்ந்தவளவில் நம்மாழ்வாரருளிச்செய்த நான்கு திவ்யப்ரபந்தங்களுள் இரண்டாவதான திருவாசிரியத்தில் இரண்டாவது பாசுரத்திலிருந்து அவதரித்ததென்று திண்ணமாக எண்ணலாயிற்று. அப்பாசுரத்தின் முற்பகுதியும், * அம்ருதஸாகராந்தர் நிமக்நேத்யாதி ஸ்வாமி ஸ்ரீஸூக்தியின் முற்பகுதியும் பாஷைவேற்றுமையேயன்றிக் கருத்துவேற்றுமையற்றிருப்பதை நன்கு காணலாம். திருவாசிரியப்பாசுரம் * உலகுபடைத்துண்டவெந்தை. அறைகழல் சுடர்ப்பூந்தாமரை சூடுதற்கு. அவாவாருயிருருகியுக்க, நேரியகாதலன்பிலின்பீன் தேறல். அமுதவெள்ளத்தானாஞ்சிறப்பு... .....* இத்யாதி. இதையே மொழிபெயர்த்தருளியுள்ளார் ஸ்வாமி ஸ்ரீவைகுண்டகத்யாவஸானத்திலென்பதை அடுத்தபடியாக விவரிக்கிறேன். மேலேகாட்டிய திருவாசிரியப்பாசுரப்பகுதியின் பொருளை முந்துற முன்னம் விவரிக்கிறேன். [உலகுபடைத்துண்டவித்யாதி.] எம்பெருமானுடைய திருவடித்தாமரைகளை நாம் சிரமேல் அணிந்துகொள்ள வேணுமென்று ஆவல் கொண்டு அந்த ஆவலினால் நெஞ்சு நீர்ப்பண்டமாக உருகி மேன்மேலும் பரபக்தி பரஜ்ஞான பரமபக்திகள் தலையெடுத்து அந்த நிலைமையில் அமர்ந்திருக்கையாகிற அம்ருதஸாகரத்திலே ஆழ்ந்திருப்பவ

ளுய்...என்றவாறு. இப்பாசுரத்தில் * அறைகழல் சுடர்ப்பூந்தாமரை சூடுதற்கு...நேரியகாதல் அன்பிலின்பீன்தேறல் அமுத வெள்ளம்* என்றவிடத்து, ''காதல் அன்பு இன்பு தேறல் அமுத வெள்ளம்'' என்ற ஒரு பொருட்பன்மொழிகளையே அடுக்கியிருக்குமழகை நோக்கி உள்குழைந்தருளின எம்பெருமானர், கத்யத்தில்

> *** கதா அஹம் பகவத்பாதாம்புஜத்வயம் சிரஸா தாரயிஷ்யாமி! கதா அஹம் பகவத்பாதாம்புஜத்வயபரிசர்யாசயா......கதா அஹம் பகவத் பாதாம்புஜத்வய பரிசர்யா கரணயோக்ய:......பகவத் பரிசர்யாயாம் ஆசாம் வர்த்தயித்வா ***

இத்யாதி ஸூக்திகளைத் தாம் வாய்வெருவும் முறையிலே அருளிச் செய்தாராயிற்று.

ஸ்வாமி ஸாதித்தருளின * அம்ருதஸாகராந்தர் நிமக்ந ஸர்வாவயவத்வம் ஸ்ரீவைகுண்டத்திலே: * முகில் வண்ணவானத்திமையவர் சூழவிருப்பர் பேரின்ப வெள்ளத்தே * (7-2-11) என்று திருவாய்மொழியில் ஆழ்வார் அருளிச்செய்த பேரின்ப வெள்ளத் திருப்பும் திருநாட்டிலேயாம். * இச்சுவைதவிர...அச்சுவை பெறினும் வேண்டேன் * என்றிருக்கிற நாம் * வாழ்வர் வாழ்வெய்தி ஞாலம் புகழவே (3-3-11) * இங்கேகாண இப்பிறப்பே மகிழ்வர் எல்லியுங்காலையே * (8-5-11) என்கிறபடியே இந்நிலத்திலேயே உலகமெல்லாங்காணப் பேரின்ப வெள்ளத்தில் அமர்ந்திருக்கவேணுமானல் * முன்னவராம் நங்குரவர் மொழிகள் உள்ளப்பெற்றோம் முழுதுநமக்கவை பொழுது போக்காகப் பெற்றோம் * என்ற மணவாளமாமுனிகளின் திவ்ய ஸ்ரீஸூக்தியின்படியிருத்தலொழிய வேறொன்றும் நானறியேன்.

அமரகோசத்தில் அமரர்களின் பெயர்களைச் சொல்லிவருமடைவில் * அமர்த்யா **அம்ருதாந்தஸ:** * என்று கூறப்பட்டது. (அம்ருதாந்தஸ:) என்பதற்கு அமுதத்தை உணவாகவுடையவர்கள் என்று பொருள். அந்த அமுதம் எப்படியிருக்குமென்று யாருங் கண்டிலர். **அமர்த்யா:** என்னும் பெயர்க்கு எதிரிடையாக **மர்த்யா:** என்று பெயர் பெற்றிருக்கின்ற நாம் பருகும் அமுதமும், அல்லும் பகலும் குடைந்தாடும் அமுதக்கடலும் அந்த அமரர்களுக்கு ஒருகாலும் கிடைக்காது. இவ்வுலகத்திலுள்ளவர்களிலும் * ம்தநாவலோக்ய க்ருதீந: பரிபுஞ்ஜதேதம் * என்று பட்டர் அருளிச்செய்தபடியே சில பாக்யசாலிகளுக்கேயன்றோ கிடைக்குமது குலசேகராழ்வார் தமது திருமொழியில் *எம்பெருமான்றன் சரிதை செவியால் கண்ணால் பருகுவோம் இன்னமுதம்

மதியோமன்றே * என்கிறார். பெரியாழ்வார் தமது திருமொழியில் * அறிவையென்னுமமுதவாறு தலைப்பற்றி வாய்க்கொண்டதே * என்கிறார். அவரே தமது திருமொழியைச் சாற்றும்போது (5-4-11) * அந்தணர்தமமுதம் * என்று எம்பெருமானுக்கு ஒரு திருநாமம் சாத்துகிறார். [ஆயரேற்றையமரர் கோவை அந்தணர்தம் அமுதத்தினை] என்கிற பாசுரம் அமுதமே வடிவெடுத்தன்றோவிருப்பது.

பிள்ளைப்பெருமாளையங்கார் திருவரங்கக்கலம்பகத்தின் முகப்பில் நம்மாழ்வார்க்குக் காப்புச் செய்யுள் இடுகின்றவர் * மறைப்பாற்கடலைத் திருநாவின் மந்தரத்தாற் கடைந்து, துறைப்பாற்படுத்தித் தமிழாயிரத்தின் சுவையமிழ்தம் கறைப்பாம்பணைப்பள்ளியா னன்பரீட்டங் களித்தருந்த, நிறைப்பான் கழலன்றிச் சன்மவிடாய்க்கு நிழலில்லையே * என்றார். இப்பாசுரம் * கண்ணிநுண்சிறுத்தாம்பையும் வென்றன்றோ விளங்குகின்றது. அந்தக் கலம்பகந்தன்னிலேயே அழகியமணவாளனுடைய திருப்புயங்களை வருணிப்பதற்கு ஒரு பிரமாண்டமான பாசுரம் பணிக்கின்றார் ஐயங்கார். * நகு கதிர் வழங்கு தகடுபடு செம்பொன் * என்று தொடங்கி * அழகிய மணவாளர் கொற்றப்புயங்களே * என்று தலைக்கட்டுவது அந்தச் செய்யுள். அதில் * அருமறை துணிந்த பொருள் முடிவை யின்சொலமுதொழுகுகின்ற தமிழினில் விளம்பியருளிய சடகோபர் சொல் பெற்றுயர்ந்தன * என்பது ஓர் அடைமொழி. இதில் * அமுதொழுகுகின்ற தமிழ் * என்றது திருவாய்மொழியை.

பதினறடி வேங்கைப் புலியென்று பல பெரியார் வழங்குமிச் செய்யுள் முழுவதையும் ஒரு ஸமயம் அடியேன் திருவரங்கம் பெரிய கோயிலில் நான்கு நாள் உபந்யஸிக்க ப்ராப்தமானபோது * அருமறை துணிந்த பொருள் முடிவை யின்சொல் அமுதொழுகுகின்ற தமிழினில் விளம்பியருளிய சடகோபர் சொல்பெற்றுயர்ந்தன * என்னுமிவ் வடியைச் சொல்லக் கேட்டவர்கள் — பொருளில் மனஞ்செலுத்தாமல் சொல்வடிவந்தன்னிலேயே கண்ணநீர் கைகளாலிறைப்பவர்களாயினர். * அமுதொழுகுகின்ற தமிழ் * என்ற சொற்றொடரை எத்தனை தடவை சொன்னாலும் பர்யாப்தி பிறவாதே. அமுது ஒழுகிக்கொண்டேயிருக்கிறதே!

சக்ரவர்த்திதிருமகனார்படியைப் பிராட்டியிடம் பேசுகின்ற திருவடி * அநித்ரஸ்ஸததம் ராம: ஸுப்தோபி ச நரோத்தம:. ஸீதேதி மதுராம் வாணீம் வ்யாஹரந் ப்ரதிபுத்த்யதே * என்கிறார். இங்கு (ஸீதேதி மதுராம் வாணீம்) என்றதில் மிகமிக ஆராய்ச்சி செலுத்தவேணும். உண்ணாதுறங்காதிருக்கும் பெருமாள் கதாசித் உறங்கினாலும்

உணர்ந்தெழும்போது ஸீதே! என்று சொல்லிக்கொண்டே எழுகிருராம். அப்போது அமுதொழுகினபடியைத் திருவடி கண்டிருந்தபடியால்தான் * ஸீதேதி மதுராம் வாணீம் வ்யாஹரந் ப்ரதிபுத்யத* என்று கூறலாயினன் என்பர் பேராசிரியர்கள்; **மதுராம் வாணீம்** என்று ஒரு சாகாம்ருகம் சொல்ல ப்ரஸக்தியுண்டோ? நெஞ்சு கனிந்து சொல்லவல்லார் சொல்லும்போதன்றோ அமுதொழுகக் காண இயலும்.

இந்த ப்ரஸங்கத்தில் பலபல அமுத வெள்ளங்கள் நினைவுக்கு வருகின்றன. எதையெழுதுவேன்! எதைவிடுவேன்! * **அமுதிலு மாற்ற இனியன்** * என்கிற திருவாய்மொழிப்பாசுரம் ஒரு பாஷண்டியின் நெஞ்சை உளுக்கிவிட்டதென்கிற இதிஹாஸத்தை ஸ்மரித்து நிற்கிறேன். ஸ்ரீமந்நாதமுனிகள் திருவாய்மொழிக்குத் தனியனிடத் தொடங்கும்போதே * பக்தாம்ருதம் விச்வஜநாநுமோதநம் * என்கிருர். இதற்கு மூலம் * தொண்டர்க்கு **அமுதுண்ணச்** சொல்மாலைகள் சொன்னேன் * என்கிற திருவாய்மொழிப்பாசுரம்......நெஞ்சழிந்து இவ்வளவோடு நிற்கிறேன். ... ... ... ... *

# 2. உறவின் உணர்ச்சியே போதும்

எம்பெருமான், சேதனர்களையும் அசேதனங்களையும் சரீரமாகக் கொண்டவன். அவன் பெருமையில் தலைநின்றவன். நாம் சிறுமையில் தலை நிற்பவர்கள் நாம் அப்பெருமானை வழிபடுதற்கு உரியோம். அப்பெருமான் திறத்து நாம் செய்யக்கூடிய வழிபாடுகள் பலவகைப் பட்டிருக்கும். அவற்றைப பற்றின விரிவுகள் சாஸ்திரங்களில் விசதமாகக் காணக் கிடைக்கும். அந்த வழிபாடுகளெல்லாம் ஒரு புறமிருக்கட்டும். அவாப்த ஸமஸ்தகாமனை பெருமானுக்கு நாம் செய்யும் வழிபாடுகள் என்ன பயனைத் தரப்போகின்றன! நம்முடைய ஸ்வரூபம் நிறம் பெறுதற்காகவே நாம் வழிபடுவோமத்தனை. எம்பெருமான் அல்பஸந்துஷ்டன். அநாதிகாலமாக அவனோடு எதிரம்பு கோக்கின்ற (அதாவது—விவாதப்படுகின்ற) கொடிய ஸம்ஸாரிகள் நாம். இந்நிலைமையில்நின்றும் நாம் நீங்கி அவனோடு நமக்குண்டான ஒழிக்க வொழியாத உறவுகளைத் தெரிந்துகொண்டோமாயின் இதுவே பரம பூஜையாகும். ஸம்பந்தஜ்ஞான மாத்திரமே நமக்கு மேலான நன்மைகளுக்கு எல்லை; அஃது உண்டானல் நாம் எம்பெருமானோடு விவாதப்படமாட்டோம். விவாதம் தொலைந்ததென்னில் எவ்விதமான பணிவிடைகளும் நாம் செய்தோமாவோம். மநுஸ்ம்ருதியில் (8—92) ''யமோ வைவஸ்வதோ ராஜா யஸ் தவைஷ ஹ்ருதி ஸ்தித:, தேநசேத் அவிவாதஸ் தே மா கங்காம் மா குரூந் கம:'' என்று சொல்லிற்று;

இதன் கருத்தாவது — ஸர்வநியாமகனுயும் தண்டதரனுயும் (அல்லது ஸௌர்யவம்சத்திற் பிறந்தவனுயும், (அல்லது) ஆதித்ய மண்டலவாஸியாயும்) எல்லார்க்கும் இனியனுயுமிருக்கிற எம்பெருமான் உனது உள்ளத்தினுள்ளேயுளன்; அவனேடு விவாதம் நெடுநாளாக அநுவர்த்தித்துக்கொண்டு வருகின்றது; அதாவது, இந்த ஆத்ம வஸ்துவை அவன் தன்னுடையதாக அபிமானித்தால் அதற்கு இசையாதே 'இது என்னுடையதுதான்' என்று செருக்கியிருப்பதுவே விவாதம். இது தொலைந்தொழியுமாகில், கங்கை முதலிய புண்ய க்ஷேத்ரங்களை ஸேவிக்கப் போகவும் வேண்டா. அஹங்கார மமகாரங்களை உள்ளே வைத்துக்கொண்டு பிராயச்சித்தம் பண்ணுகையாவது ஒரு பாத்திரத்தினுள்ளே அசுத்த வஸ்துவை யிட்டு வைத்து மேலே பளபளவென்று சுத்தி செய்வது போன்றதாதலால், உள்ளே எம்பெருமானேடு விவாதத்தை வைத்துக்கொண்டே க்ஷேத்ர தீர்த்தயாத்திரை செய்வது எதற்கு? அந்த விவாதம் தொலைந்துவிட்டால் இருந்த விடத்திலேயே பரமசுத்தியுண்டாதலால் ஒரு க்ஷேத்திரத்தையும் ஒரு தீர்த்தத்தையும் தேடிப் போகவேண்டா என்றபடி. ஆகவே விவாதம் நீங்குமளவே வேண்டுவது. கூரத்தாழ்வானும் வரதராஜஸ்தவத்தில் "த்வத்தாஸ்யமஸ்ய ஹி மம ஸ்வரஸப்ரஸக்தம் தச்சோரயந்நயமஹம் கில சஸ்கலப்ராக், த்வம் மாமகீந இதிமாம் அபிமந்யஸேஸ்ம ஹஸ்தீச! ஸம்சமய நஸ் தமிமம் விவாதம்" என்ற ச்லோகத்தினுல் இதனைத் தெரிவித்தருளினுர். ஸம்பந்தவுணர்ச்சி உறைப்பாக உண்டாவதுதான் விவாதம் தொலைந்தபடியாகக் கருதத்தக்கது ஸம்பந்தஜ்ஞானமுண்டானவளவிலேயே நாம் வாழ்ச்சி பெற்றோமாவோம். இதுபற்றி ஈடு முப்பத்தாருயிரப்படியில் (1 2·7) ஒரு இதிஹாஸம் விநோதமாகக் காட்டப்பட்டுள்ளது; அதாவது —

ஒரு நகரத்தில் ஒரு வணிகர் தலைவன் இருந்தனன். அவன் வெளிநாடுகளில் நீண்டகாலம் வஸித்து வர்த்தகஞ் செய்து விசேஷமாகப் பொருள் படைக்க விரும்பி த்வீபாந்தரப்பயணம் செய்ய முயன்றான். அத்தருணம் அவனது மனைவி கருவுற்றிருந்தாள். அப்போதே அவன் புறப்பட்டு த்வீபாந்தரம் சென்று சேர்ந்தனன். பிறகு இரண்டொரு மாதங்கடந்த பின் அவனது மனைவி ஊரில் ஒரு புதல்வனையீன்றாள். அம்மகன் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாகச் சுக்கிலபக்ஷச் சந்திரன் போன்று வளர்ந்து வருகின்றான். த்வீபாந்தரத்தில் வர்த்தகஞ்செய்து வாழ்ந்து கொண்டிருக்கும் அவ்வணிகன் மகப்பேறு உண்டான செய்தியை யறிந்து பெருமகிழ்ச்சி கொண்டு விரைவிலேயே ஊர் வந்து சேருவதற்குப் பெருமுயற்சி செய்தும் மேன்மேலும் வர்த்தகத்தில் மீதூர்ந்து சென்ற மலைப்பினுல்

கடுக மீண்டுவர முடியாமல் நெடுங்காலம் அங்கேயே தங்கிவிட்டான். மகன் தானும் உரிய வயது வாய்ந்தவளவில் தனது குலத்தொழிலாகிய வர்த்தகத்தையே கைப்பற்றி வந்தான். வயது முதிர்ந்தவளவிலும் இவனது தகப்பன் த்வீபாந்தரத்திலேயே வாழ்கிருன. பின்பொரு நாள் அவ்வணிகனது மகன் தொழில் முறையில் வெளிநாட்டிற்குச் சென்றிருந்து பல சரக்குக்களுடன் கடல் வழியாய் ஊர்த்துறைமுகம் வந்து சேர்ந்தான். அவன் வந்த கப்பலிலேயே அவனது தந்தையும் த்வீபாந்தரத்திலிருந்து பல மூட்டைகளுடன் ஊர் வந்தனன். அந்தக் கப்பல் துறைமுகஞ் சேர்ந்தவுடனே குமாரன் தனது மூட்டைகளை இறக்குவதாக உத்தேசித்த ஓர் இடத்திலேயே தகப்பனும் தான் கொணர்ந்த மூட்டைகளை இறக்க நினைத்தனன். இவ்விருவரும் தங்களுக்குள்ள பித்ரு புத்ரபாவ ஸம்பந்தத்தை அறியாதவர்கள்; 'இவன் நம் மகன்' என்று தந்தை அறியான். 'இவர் நம் தகப்பனர்' என்று மகனுமறியான். உண்மையில் இவர்கட்கு இவ்வுறவுமுறை தெரிவதற்கு ப்ரஸக்தியில்லையே. இக்குமாரன் பிறப்பதற்கு முன்னமே யன்றோ அவ்வணிகன் வெளிநாடு சென்றிட்டான். ஆகவே 'இவன் ஒரு வெளிநாட்டு வர்த்தகன் என்று மகன் பாவிக்கலானுன். தந்தையும் மகனை அங்ஙனமே பாவித்தான் அதனுல் இறக்குமதியிடத்தைப் பற்றிய விவாதம் இவர்கட்கு முற்றிவிட்டது. 'இவ்விடத்தை நானே முதலில் உத்தேசித்தேன்' என்று இருவரும் நெடுமம்பாதாக வாதாடுகின்றனர். அப்போது இவ்விருவருடையவும் உறவு முறையை உணர்ந்திருப்பானெரு கிழவன் கண்டு 'அந்தோ! உறவு அறியாமல் இது என்ன விவாதம்?' என வருந்தி இவன் உன் தந்தை, நீ அவனது மகன்; ஆயிருக்க ஏதுக்கு? இங்ஙனே வீண் விவாதம்?' என்றறிவித்தனன். அதன் பிறகு அங்கு என்ன நடந்திருக்க வேணும்! ஸம்பந்த உணர்ச்சியுண்டானவுடனே கீழிழந்த நாளைக்குச் சோகித்து, இருவர் சரக்கும் ஒரு சரக்காய். தந்தை ரக்ஷகனுய், மகன் ரக்ஷ்யனுய், விவாதம் தொலைந்து பரஸ்பரம் தலைப்பற்றி வாய்க்கொண்டவாறு பேச்சுக்கு நிலமாமோ?

அதுபோலவே நாமும் நிருபாதிக பிதாவாகிய ஸ்ரீமந்நாராயணனேடே "உன்றன்னேடுறவேல் நமக்கு இங்கொழிகக் வொழியாது" என்னும்படியான உறவின் உறுதியை உற்று நோக்கி ஈச்வரன் '**த்வம் மே**' [நீ எனக்கு அடியவன்] என்றால், "**அஹம் மே**" (நான் என்க்கே உரியேன்) என்னும் விவாதத்தை விட்டொழித்தால் "பொன்னுலகாளீரோ புவனி முழுதாளீரோ" என்னும்படியாக உபயவிபூதியும் நாம் தாராளமாக அநுபவிக்கும் செல்வமாகுமன்ருே.

மாலைப்பொழுதில் விஹாரார்த்தமாக வெளியே சென்ற ராஜ குமாரன் வழியில் அழகியதொரு தோட்டத்தைக் கண்டு உள்ளே புகுந்து திளைக்க நினைத்தும் கட்டுங்காவலுமாயிருந்தது கண்டு அஞ்சி நிற்குமளவில் ‘இஃது உன் தகப்பனுருடைய தோட்டங்காண்’ என்று ஒரு பெரியார் தெரிவிக்க, பிறகு அச்சிறுவன் தேங்காதே புக்கிருந்து திளைக்கலாயினன் — என்றவொரு கதையையுங் காட்டியருளினர் நம்பிள்ளை. ஸம்பந்தவுணர்ச்சியினுலாகும் நன்மை சொல்லுந்தரமன்று.

## 3. உறவுகள் ஒன்பது

எம்பெருமானுக்கும் நமக்குமுள்ள ஸம்பந்தம் ஒன்றன்று, இரண்டன்று; ஒன்பதுவகையான ஸம்பந்தங்கள் திருவஷ்டாக்ஷர மஹா மந்திரத்திலிருந்து கிடைக்கின்றன, அத்திருமந்த்ரம் நமக்கு மங்கல ஸூத்ரம் போன்றது என்று ஆசார்யர்கள் அருளிச் செய்கிருர்கள். உலகில் ஒரு கன்னிகையின் கழுத்தில் தாலி ஏறினவாறே தம்பதிகளுக்கு பர்த்ருபார்யாஸம்பந்தம் என்ற ஒரு உறவுதான் ஏற்பட்டதாகும். திருமந்திரமாகிற தாலி நமது கழுத்தில் ஏறினவாறே ஒரு உறவு அல்ல; ஒன்பது உறவுகள் ஏற்பட்டனவாகும்.

எங்ஙனே யென்னில்; அதில் முதல் பதம் ப்ரணவம். அது அகாரமென்றும் உகாரமென்றும் மகாரமென்றும் [மூன்றக்ஷரமான] மூன்று பதங்கொண்டது. முதற்பதமான அகாரத்தில் மூன்று உறவுகள் தோன்றும். 1. பிதாபுத்ரபாவம். 2. ரக்ஷ்யரக்ஷகபாவம். 3. சேஷ சேஷிபாவம், அந்த ஒரு அக்ஷரத்தில் இந்த மூன்று உறவுகள் எங்ஙனே தோன்றுகின்றன வென்னில்; அகாரத்திற்கு ப்ரக்ருதி சக்தியென்றும் தாதுசக்தியென்றும் இரண்டு வகையான சக்திகளுண்டு. ‘‘அகாரோவை ஸர்வா வாக்’’ என்றும் ‘‘அகரமுதல வெழுத்தெல்லாம்’’ என்றும் சொல்லுகிறபடியே அகாரமானது எல்லா எழுத்துக்களுக்கும் முதன்மையாயிருந்துகொண்டு, தனக்கு அர்த்தமான எம்பெருமான் உலகுக்கெல்லாம் முதல்வன் என்று காட்டுதலாகிறவிது ப்ரக்ருதி சக்தி யெனப்படும். ‘‘ஆதிபகவன் முதற்றேயுலகு’’ என்ற குறளும் இதனையே காட்டிற்று. ஆகவே, அகாரத்தில் ப்ரக்ருதிசக்தியினுல் ஏற்பட்டவுறவு கார்யகாரண பாவம் (அல்லது) ஜந்ய ஜநகபாவம், (அல்லது) பிதாபுத்ரபாவம் என்பதாம்.

அந்த அகாரமானது (அவ–ரக்ஷணே) என்கிற தாதுவிலிருந்து தேறினதாகையாலே எம்பெருமான் ஸர்வரக்ஷகன் என்றதாகும். இதனுல் (2) ரக்ஷ்ய ரக்ஷகபாவமாகிற வுறவு தேறிற்றுகிறது. இதுதான் தாதுசக்தி ஸித்தமெனப்படும்.

இந்த அகாரத்தின்மேல் வியாகரண சாஸ்த்ரப்படி (வைதிக ப்ரக்ரியையில் சதுர்த்தீ விபக்தியிருந்து லோபித்ததாகக் கொள்ளப் படுகிறது இல்லையாகில் அந்வயிக்கமாட்டாது. அந்த விபக்தியானது 'அவனுக்கு சேஷப்பட்டது' என்கிற பொருளைக் காட்டுதலால் (3) சேஷ சேஷி பாவம் என்கிறவுறவு தேறிற்றுகும்; ஆக அகாரத்தில் மூன்றுறவுகள் தேறின,

இனி அடுத்துள்ள உகாரமானது அவதாரணப் பொருளதாய் எம்பெருமானுக்கே சேஷப்பட்டது என்று காட்டுதலால் "கண்டா ரிகழ்வனவே காதலன் தான் செய்திடினும், கொண்டானையல்லா லறியாக் குலமகள்போல்" (பெருமாள் திருமொழி 5-8) என்கிறபடியே (4) பதிபத்நீபாவமாகிற உறவு தேறுகின்றது.

அதற்கு அடுத்துள்ள மகாரமானது "மந-ஜ்ஞாநே" "மந-அவபோதநே" என்கிற தாதுக்களிலிருந்து நிஷ்பந்நமாகி ஜ்ஞாதா வான ஆத்மாவைச் சொல்லுதலால் (5) ஜ்ஞாத்ரு ஜ்ஞேயபாவமென் கிற உறவு தேறிற்றுகும். எம்பெருமான் அறியப்படுமவன், ஆத்மா அறிகின்றவன் என்றவாறு. "ஒண் தாமரையாள் கேள்வனொருவனையே நோக்குமுணர்வு" என்கிற பொய்கையார் பாசுரம் இங்கு அநுஸந்தேயம்.

அதற்குப் பிறகு உள்ள நம: பதத்தினுல் தன்னை ரக்ஷித்துக் கொள்வதில் தனக்கு எவ்விதமான உரிமையும் இல்லையென்று காட்டு கிற முகத்தினுல் ஆத்ம வர்க்கமெல்லாம் எம்பெருமானுடைய ஸொத்து என்று தெரிவிப்பதனுல் (6) ஸ்வஸ்வாமிபாவம் என்கிறவுறவு தேறிற்றுகிறது.

இனி நாராயணபதத்தை யெடுத்துக்கொண்டால் இதற்குத் தத்புருஷஸமாஸமென்றும், பஹுவ்ரீஹி ஸமாஸமென்றும் இருவகை யான வ்யுத்பத்தி மார்க்கங்கள் கொள்ளப்பட்டு, நாரபதார்த்தமான ஸகலவஸ்துக்களுக்கும் எம்பெருமான் ஆதாரமென்றும், அந்த ஸகல வஸ்துக்களையும் தான் ஆதாரமாகவுடையவனென்றும் தெரிந்து கொள்ளுகிறோம். ஆதலால் **நாராணும் அயநம்** என்கிற தத்புருஷனுல் (7) ஆதாராதேயபாவமென்கிற உறவு தேறுகின்றது. **நாரா: அயநர் யஸ்ய ஸ:** என்கிற பஹுவ்ரீஹியால் (8) சரீரசரீரிபாவமென்கிற வுறவு தேறு கின்றது. நாரங்கள் பகவானிடத்திலே யிருக்கின்றன என்பது தத் புருஷ ஸித்தம். நாரங்களிலே பகவானுளன் என்பது பஹுவ்ரீஹி

ஸித்தம். அவற்றிலே இவனிருப்பதாவது அவற்றை உடலாகக்கொண்டு தான் அவற்றுக்கு உயிராக இருப்பதேயாதலால் இதனுல் சரீராத்ம பாவம் ஸித்தித்ததென்னக் குறையில்லை.

இனி அந்த நாராயண பதத்திலுள்ள சதுர்த்தியானது, காகாக்ஷிந்யாயத்தாலே முன்னும் பின்னும் தன்னிடத்திலும் அந்வயிக்கின்ற நமஸ்ஸினுல் பரிஷ்காரம் பெற்று, நாராயணனுக்குச் செய்யப் படுகின்ற கைங்கரியத்தினுலாகும் போகமும் அவனுக்கேயன்றி இந்த ஜீவனுக்கில்லையென்று நிஷ்கர்ஷித்துக் காட்டுதலால் (9) போக்த்ரு போக்யபாவம் என்கிற உறவைத் தெரிவிக்கின்றது. எம்பெருமானை போக்தா, ஜீவாத்மா போக்யன் என்றவாறு. ஜீவாத்மாவை போக்தா வாகவும் எம்பெருமானை போக்யனுகவும் கொள்வதும் ஒரு புடையுண்டெனினும் திருமந்திரத்தில் வடிக்கட்டினபொருள் முந்துறப் பணித்ததேயாகும். ஆகத் திருமந்திரத்தினுல் நவவித ஸம்பந்தங்கள் தெரிய வந்தன. இவற்றைச் சிந்தையில் பதிய வைத்துக் கொள்வதற்காக ''பிதா ச ரக்ஷகச் சேஷீ பர்த்தா ஜ்ஞேயோ ரமாபதி:, ஸ்வாம் யாதாரோ மமாத்மா ச போக்தா சாத்யமநூதித:'' என்கிற ச்லோகத்தைப் பெரியார் பணித்தனர். ... ... ... *

## 4. ரஸிக ஸம்பாஷணை

ஓரிடத்தில் ஒருநாள் ரஸிகர்களிருவர் கூடினர். மதுரமான வஸ்துவைச் சொல்லென்று ஒருவர் மற்றொருவரைக் கேட்கிருர். அவர் ஒவ்வொன்ருகச் சொல்லுகிருர். அதை மறுத்துப் பரம மதுரமானது இன்னதென்கிருர், முதலில் வினவினவர்;

இதை ஒரு சுலோகமாக அமைத்திருக்கின்றேன், அது வருமாறு—

அம்ருதமம்ருதம் கஸ் ஸந்தேஹ:? ஸிதாபி ச ஸா ஸிதா
மது ச மது தத் த்ராக்ஷா த்ராக்ஷா ததேவ ச பாயஸம்:
மதுரமகிலம் வஸ்து ப்ராப்தம் மயேதி யதி க்ஷிதௌ
கதிசித் அபிதித்ஸேயுஸ் ஸத்யம் ததேவ சடாரிவாக்.

**(விவரணம்)** மதுரமான வொரு வஸ்துவைச் சொல்லென்று கேட்டதற்கு அம்ருதம்-என்று விடைகூறினுன். [அம்ருதமம்ருதம் கஸ் சந்தேஹ:] அம்ருதம் அம்ருதந்தான். என்ன ஸந்தேஹம்? என்ருன் வினவினவன் இதன் கருத்து மேலே விளங்கும். இன்னொரு மதுர வஸ்துவைச் சொல்லென்ன, ஸிதா என்ருன். (வெள்ளைச் சர்க்கரை

யென்றபடி) வெள்ளை சர்க்கரை வெள்ளை சர்க்கரைதானென்றான் வினவினவன். இன்னொரு மதுரவஸ்துவைச் சொல்லென்ன, மது என்றான்; மது மதுதான் என்றான் வினவினவன். இன்னுமொரு மதுரவஸ்துவைச் சொல்லென்ன, த்ராக்ஷா என்றான். த்ராக்ஷை த்ராக்ஷைதான் என்றான் வினவினவன். இன்னொரு மதுரவஸ்துவைச் சொல்லென்ன, பாயஸம் (கன்னல்) என்றான். கன்னல் கன்னல்தான் என்றான் வினவினவன் அதன்மேல், அது அதுதான் அது அதுதான் என்று சொல்லி வருகிற உன்னுடைய கருத்து யாதோ? என்று கேட்டான் வினவப்பட்டவன்.

உத்தரார்த்தம் முழுவதும் அதற்கு விடை கூறுவதாம். '' அம்ருதம், ஸிதா, மது, திராக்ஷை, பாயஸம் முதலான மதுரவஸ்துக்களெல்லாவற்றையும் நான் பருகினேன் '' என்று இந்நிலத்தில் சிலர் சொல்ல விரும்பினால் அது ஒரே ஒரு வஸ்துதான்: எதுவென்னில், நம்மாழ்வாருடைய திருவாய்மொழியொன்றே அது — என்பது விடைக்காரனுடைய கருத்து. ஆழ்வார் (எம்பெருமானை யநுபவிக்கும்போது * யானுந்தானுமெல்லாம் தன்னுள்ளே கலந்தொழிந்தோம். தேனும் பாலும் நெய்யும் கன்னலுமமுது மொத்தே * என்றும், * கன்னல் பாலமுதாகிவந்து என்னெஞ்சங்கழியானே * என்றும், * எனக்குத் தேனே பாலே கன்னலேயமுதே திருமாலிருஞ்சோலைக்கோனே * என்றருளிச்செய்து அநுபவிக்கிறார். அந்த போக்ய வஸ்துக்களெல்லாம் நமக்கு எதுவென்றால், நம்மாழ்வாருடைய திருவாய்மொழியொன்றேயென்னத் தட்டில்லை. இதனை * பக்தாம்ருதம் * என்ற ஸ்ரீமந் நாதமுனிகளின் திருவாக்குக்கு வியாக்கியானமாகக் கொள்க. மேலேயுள்ள சுலோகத்தின் முடிவில் காணும் (சடாரிவாக்) என்பதற்கு இரண்டு வகையாகப் பொருள். 'சடாரே: வாக்' என்று கொள்வது ஸாதாரணம். 'சடாரிரிதி வாக்' என்று கொள்வது சிறக்கும். மதுரகவிகள் * தென்குருகூர் நம்பி என்றக்கால், அண்ணிக்குமமுதூறுமென்னாவுக்கே * என்று பணித்ததை விவரித்தபடி. ... *

## 5. நம்பெருமாள் திருமஞ்சனத்தில் பட்டருடைய ஈடுபாடு

எம்பெருமானுக்கும் நமக்குமுள்ள நவவித ஸம்பந்தங்களையும் நாம் உணரப்பெறுவிடினும் '' அவன் சேஷி நாம் சேஷபூதர் '' என்று இத்தனையேனும் அறிய ப்ராப்தம். இவ்வளவையே எம்பெருமான் எதிர்பார்த்திரா நின்றான். கூரத்தாழ்வான் திருக்குமாரராகிய ஸ்ரீபராசர பட்டர் கோயிலில் வாழும் நம்பெருமாளுடைய திருமஞ்சனங்களை

ஸேவிக்குங்காலங்களில் அந்த ஸந்நிவேசத்தில் ஈடுபட்டும் வடிவழகில் ஈடுபட்டும் சமத்காராதிசயம் பொலியப் பலச்லோகங்களை அருளிச் செய்திருக்கிறார். அவை நாளைக்கும் அவருடைய திருவம்சஸ்தர்களால் திருமஞ்சன ஸமயங்களில் விண்ணப்பம் செய்யப்பட்டு வருகின்றன. அவற்றுள் "த்வம் மேஹம் மே" என்கிற ஒரு ச்லோகம் மிகவும் அற்புதமாக அமைந்தது. அதனை நம் ஆசாரியர்கள் வ்யாக்கியான க்ரந்தங்களிலே கையாண்டு வருகின்றனர் இதன் அரிய பெரிய பொருள் இங்கு விவரிக்கலாகிறது. ஸ்ரீரங்கநாதன் தோளிணை மேலும் தன் மார்பின் மேலும் சுடர்முடி மேலும் தாளிணைமேலும் புனைந்த தண்ணந்துழாய் மாலையையுடையனாய்த் திருமஞ்சனம் கொண்டருள ஸந்நத்தனாயிருக்கும்படியைப்பார்த்தால் பிரமாணம்செய்ய ஸித்தராயிருக்கிறாரோ! என்று உத்ப்ரேக்ஷிக்கலாம்படியுள்ளது என்று பட்டர் திருவுள்ளம் பற்றுகிறார். உலகத்தில் பிரமாணம் செய்பவர்கள் துளசி மாலையை யணிந்துகொண்டு ஒரு முழுக்குப்போடுவது வழக்கமாதலால் எம்பெருமானும் அங்ஙனே செய்கிறானே என்று உல்லேகிக்கிறார். பிரமாணம் செய்யவேண்டிய ஆவச்யகதை எம்பெருமானுக்கு என்ன வந்தது? என்னில், உலகத்தில் பிரமாணம் செய்பவர்கள் எதற்காகச் செய்வது வழக்கம் என்று பார்த்தால், ஒருவன் தன்னுடைய ஸொத்தைப் பிறர் கொள்ளைகொண்டால் அதைத் தனக்கு ஸ்வாதீனப்படுத்தித் தரவேணுமென்று நியாயாலயத்தில் விண்ணப்பம் செய்துகொண்டு உண்மையில் அந்த ஸொத்து யாருடையது என்று தெரிந்து கொள்வதற்காக ஸாக்ஷி விசாரணை முதலியன செய்யப்படுங்காலத்திலே தகுந்த ஆதாரங்களைக்கொண்டு உண்மையை ஸ்தாபித்துக் கொள்ள முடியாமல் அந்தோ! நம்முடைய ஸொத்தை அநியாயமாய் இழந்துவிட நேருகின்றதே! என்கிற அனுதாபமுடையார் கடைசியாக ஒரு வார்த்தை சொல்லுவது. "இது என்னுடைய ஸொத்துதானென்று பிரமாணம்செய்ய நான் துளசிமாலையணிந்து முழுக்கிட்டுவிடுகின்றேன்" என்று: நியாயாதிகாரிகளும் அதனை ஆதரித்துத் தீர்ப்புக் கொடுப்பதுண்டு. இது இன்னமும் வழக்கத்திலுள்ளது. இவ்விதமாகவே எம்பெருமானுக்கும் பிரமாணம் செய்யவேண்டிய ஆவச்யகதை நேர்ந்து விட்டதாம். அது ஏதெனில், சேதநவர்க்கம் என்கிற ஸொத்து எம்பெருமானுடையது; ஆனால் அந்த ஸொத்தை "கிம் தேந நக்ருதம் பாபம் சோரேணாத்மாபஹாரிணா" என்றும், "பண்டேயுன் தொண்டாம் பழவுயிரை யென்னதென்று கொண்டேன்" என்றும் சொல்லுகிறபடியே ஸம்ஸாரிகள் கொள்ளை கொண்டார்கள். இந்த ஸொத்து என்னுடையது என்கிறான் எம்பெருமான். ஸம்ஸாரிகளோ 'இது உன்னுடையதல்ல, எங்களுடையதே' என்கிறார்கள். விவாதம்

ஸ்ரீ:

# நித்யாநுஸந்தேய நிகமாந்தகுருஸூக்தி மாலை

**ஸ்ரீகாஞ்சீ ப்ரதிவாதிபயங்கரம். அண்ணங்கராசார்யர் தொகுத்தது**

**(முன் தொடர்ச்சி—2.)**

# வைராக்ய பஞ்சகம்

**அவதாரிகை:—** *திருமலைமால் திருமணியாய்ச் சிறக்கவந்தருளின ஸ்ரீமத் வேதாந்த தேசிகன் ஸர்வதோமுகமான ஞானம் படைத்தது போலவே விரக்தியையும் லோகவிலக்ஷணமாகப் பெற்றவராதலால் கூரத்தாழ்வானைப் போலவே தாமும் உஞ்ச வ்ருத்தியையே கொண்டு பெருமாள் திருவாராதநத்தைக் குறையற நடத்திக் கொண்டு செந்தமிழும் வடமொழியும் திகழ்ந்த நாவர்க்கு உபய வேதாந்த க்ரந்த ப்ரவசநம் செய்தருளா நின்றுகொண்டு *கார்மேனியருளாளர் கச்சிப்பதியிலேயே பேரருளாளனை மங்களாசாஸநஞ்செய்து கொண்டெழுந்தருளியிருந்தார். இவர்க்குப் பரமமித்திரரான ஸ்ரீ வித்யாரண்ய ஸ்வாமிகள் விஜய நகர மஹாராஜனிடத்தில் மிகுந்த செல்வாக்குப் பெற்றுப் பலபல வித்வான்களை ஆதரிப்பதற்குரிய ஸௌகர்யங்களை யுடையராயிருந்தபோது இந்த ஸ்ரீதேசிக சிகாமணியை ஸ்மரித்து இவருடைய ஏழைமையைப் போக்கிச் செல்வச் சிறப்பை யுண்டாக்கக்கருதி அந்த விஜயநகர நரபதியினிடத்திற்கு எழுந்தருளுமாறு ப்ரார்த்தநா பத்ரிகையை அனுப்ப, அதனைக் கடாக்ஷித்தருளின ஸ்வாமி தேசிகன் தம்முடைய நிஷ்டா விசேஷங்களை அந்த வித்யாரண்ய ஸ்வாமி அறிந்து வைத்தும் வீணாக இப்படி ஆஹ்வாநம் பண்ணுகிறாரே! எனத் திருவுள்ளம் நொந்து, அவருடைய பத்திரிகைக்கு உத்தரமாக "ந மே பித்ரார்ஜிதம் கிஞ்சித் ந மயா கிஞ்சிதார்ஜிதம், அஸ்தி மே ஹஸ்திசைலாக்ரே வஸ்து பைதாமஹம் தநம்" என்கிற ச்லோகத்தை யெழுதியனுப்ப, அவரும் அதைக் கண்டு, ஸ்வாமி தேசிகனிடத்தில் அவர் தாம் வைத்திருந்த ப்ரேமாதிசயத்தினால் எப்படியாவது இவர்க்கு அபரிமிதத்ரவ்ய லாபம் பண்ணிவைக்க வேணுமென்கிற ஆசையினால் மீண்டும் மிக நிர்ப்பந்தித்துப் பத்ரிகை விடுக்க, அப்போது ஸ்வாமி அநுக்ரஹித்தருளியனுப்பிய ச்லோக ரத்னங்கள் **வைராக்ய பஞ்சக**மென்று ப்ரஸித்தி பெற்றிருக்கும். இதன் பொருளைச் சிறிய ஞானத்தவர்களும் எளிதாகத் தெரிந்து கொள்ளுமாறு சிறிய உரையொன்று எழுதுகின்றேனடியேன். ... (ப்ர-அ)

— அவதாரிகை முற்றிற்று —

(முதல் சுலோகம்.)

க்ஷோணீ கோண சதாம்சபாலனகலா துர்வார கர்வாநல
க்ஷுப்யத் க்ஷுத்ர நரேந்த்ர சாடு ரசநாதந்யாந் ந மந்யாமஹே,
தேவம் ஸேவிதுமேவ நிச்சிநுமஹே யோஸௌ தயாலு: புரா
தாநாமுஷ்டிமுசே குசேலமுநயே தத்தேஸ்ம வித்தேசதாம். (1)

(பொழிப்புரை) பூமண்டலத்தின் ஏகதேசத்திலே நூற்றிலொருபாகத்தை ஆளுகையாகிற தொழிலினாலுண்டாகிற அடங்காச் செருக்காகிய தீயினால் (கதுவப்பட்டு) நிலைகலங்கிநின்ற அல்ப ப்ரபுக்களைப் புகழ்வதினால் செல்வம் பெறுகின்றவர்களை ஒரு பொருளாக மதிக்கமாட்டோம்; (எம்முடைய அத்யவஸாயம் எப்படிப்பட்டதென்றால்) இரக்கமுடையனான யாவனொரு எம்பெருமான் முற்காலத்தில், ஒரு முஷ்டியளவான அவல் கொடுத்த குசேலமுனிவனுக்குக் குபேரனாகுந் தன்மையைக் கொடுத்தருளினானோ அந்தப் பரமபுருஷனை அடிபணிவதற்கே அறுதியிட்டிராநின்றோம்.

● ஒரு நாயகமாய் ஓடவுலகுடனாண்டவர் என்றாற்போல் பூமண்டலம் முழுவதையும் அரசாளவல்லவர்கள் இப்போது இல்லையே. பூமியின் பலகோடி நூறாயிரத்தில் ஒரு பங்குமாத்திரமான நிலத்தை ஆளப்பிறந்த அற்ப அரசர்களே உள்ளார்கள். இந்த அல்ப அதிகாரத்திற்கே இவர்களுடைய அஹங்காரம் வாசாமகோசரம். அந்தச் செருக்கினால் தீக்கதுவினாற்போல் தடுமாறிக்கிடக்கின்ற அந்த அல்பர்களிடஞ்சென்று 'நீ இந்திரன், சந்திரன், குபேரன்' என்று இல்லாத பொய்யுரைகளைப் புனைந்துபுகழ்ந்து ஜீவிப்பவர்களுடைய ஜீவநத்தை ஒரு பிழைப்பாகவே மதிக்கமாட்டேன். "உனக்குப் பணிசெய்திருக்குந் தவமுடையேன் இனிப்போயொருவன் தனக்குப் பணிந்து. கடைத்தலை யிற்கை நின்சாயை யழிவு கண்டாய்" என்னும்படியான திண்ணிய அத்யவஸாயமுடைய நான் அந்த எம்பெருமானைத் தவிர்த்து மற்றொருவன் மனைக்கடையிலேபுகுந்து துவளமாட்டேன்; 'அடிமை யென்னும் அக்கோயின்மையாலே அங்கங்கேயவை போதருங்கண்டாய்' என்றாப்போலே எம்பெருமானை அடிபணிந்தார்க்கு ஐஹிகத்தில் தானும் ஒரு குறையுண்டாகுமோ? அப்பெருமான் அல்பஸந்துஷ்டன் என்னுமிடமும் குசேலோபாக்கியான முகத்தினால் நன்கு அறியக்கூடியதன்றோ. ஆகவே ஆமுஷ்மிகத்திற்குப் போலவே ஐஹிகத்திற்கும் எம்பெருமான் கைபார்த்திருக்குமத்தனையே நமக்குள்ளது—என்றாயிற்று "கோணோ வாத்ய ப்ரபேதே ஸ்யாத் வீணாதீநாம்ச வாதநே, ஏகதேசே க்ருஹாதீநாம் அச்ரௌ ச லகுடேபி ச" என்ற மேதிநீ கோசத்தின்படி கோணசப்தம் இங்கு ஏகதேசார்த்தகம் சாடுரசநா—

அரசர்களைப் புகழ்வதை சாடுக்தி யென்பர்கள் பொதுவாகப் புகழ்ந்துரைப் பதற்கும் பெயர் ''ப்ரியவாக்யே மித்த்யாப்ரிய வாக்யே ச'' என்பர் கோசகாரர் கள் சாடுரசநாம் தந்யாம் ந மந்யாமஹே என்பது புதிய பாடம். தாநா பரிமிதா முஷ்டி: — தாநாமுஷ்டி:, தாம் முஞ்சதி தாநாமுஷ்டிமுக் — தன்மை என்று ஸமாஸம். ... ... ... (1)

ஸிலம் கிமநலம் பவேத் அநலம் ஔதரம் பாதிதும்
பய:ப்ரஸ்ருதி பூரகம் கிமு ந தாரகம் ஸாரஸம்,
அயத்நமலமல்லகம் பதி படச்சரம் கச்சரம்
பஜந்தி விபுதா முதா ஹ்யஹஹ குக்ஷித குக்ஷித:

(கருத்து) ஜாடராக்நியைத் தணிப்பதற்கு [அதாவது, பசி தீருவதற்கு] நிலங்களில் கதிர் பொறுக்கி ஜீவித்தல் போதாதோ? அதுதானும் கிடைக்கா விடினும் ஒரு சிறுங்கை நிறைக்கும்படியான குளத்துத் தண்ணீர் தாரகமாக மாட்டாதோ? வழிகளிலே (விழுந்துகிடக்கின்ற) எளிதாகக் கிடைக்கக்கூடிய அழுக்கடைந்த கந்தைத் துணியும் கோமணமாகப் போதுமே. (இப்படியிருந்தும்) பண்டிதர்கள் வயிற்றுக்காக வீணாய் அரசர்களைப் பணிகின்றார்களே! ஐயோ!

மநுஸ்ம்ருதியில் நான்காவது அத்யாயத்தில் ''அத்ரோஹேணைவ பூதாநாம் அல்ப த்ரோஹேண வாபுந: ப்ரஸ்ருத்திஸ்த்தர்ம்ஸமாஸ்த்தாய விப்ரோஜீவேத் அநாபதி'' என்று அந்தணன் ஜீவிக்கவேண்டிய வழியைச் சொல்லத் தொடங்கி ''யாத்ரா மாத்ர ப்ரஸித்த்யர்த்தம் ஸ்வை: கர்மபிரகர்ஹிதை:, அக்லேசேந சரீரஸ்ய குர்வீத தநஸஞ்சயம்'' என்று சாஸ்த்ரீய குடும்ப ஸம்வர்த்தன நித்யகர்மாநுஷ்டாந பூர்வக ப்ராணதாரண மாத்ரத்திற்காகப் பொருளீட்டலாமென்று சொல்லி எவ்வகைக் கருமங்களால் பொருளீட்டுவதென்ன, ''ருதாம்ருதாப்யாம் ஜீவேத்து ம்ருதேந ப்ரம்ருதேந வா, ஸத்யாந்ருதாப்யாம் அபி வா ந ச்வவ்ருத்த்யா கதாசந'' என்று சொல்லி அவற்றை மேல் ச்லோகங்களிலே விவரிக்கிறார் — ருதமுஞ்சசிலம் ஞேயம்... குடகோச்சயநம் உஞ்ச: இத்யாதியாலே, இங்கு குல்லூக பட்டருடைய வியாக்கியானம்-''மஞ்ஜர்யாத்மகாநேகதாந்யோச்சயநம் ஸில.'' என்றும் அதுவே இங்கு ஸிலம் எனப்பட்டது. ஔதரம் — தத்திதவ்ருத்தி.

அநலம் என்ற இரண்டில் முதலாவது அவ்யயம். (அபர்யாப்த மென்றபடி) அஷ்டச்லோகியில் ''கர்த்தும் த்யக்துமபி ப்ரபத்துமநலம்'' என்று பட்டரும், அதிமாநுஷஸ்தவத்தில் 'தேவீமவாப்துமநலம்'' என்று ஆழ்வானும் ப்ரயோகித்தமை காண்க. [ப்ரஸ்ருதி பூரகம்] ''பாணிர் நிகுப்ஜ: ப்ரஸ்ருதி:''

என்றான் அமரன். இதைத் தமிழர் சிறுங்கை என்பார்கள். ஸரஸீ பவம் ஸாரஸம் (அயத்நமலமல்லகம்) என்று ஒரேபதமாகக்கொண்டு சிலர் உரைப்பார்கள். ஆச்சாதநம் ஸம்பிதாநம் கௌபீநம் மலமல்லகம் என்று வைஜயந்தீ கோசம் என்றும் காட்டுகிறார்கள். அயத்நம் அலம் அல்லகம் என்று மூன்று பதமாகவே பிரிக்க வேணுமென்றும், மேற்காட்டிய கோசத்தில் கௌபீநம் மலம் அல்லகம் என்று பதச் சேதமென்றும், பெரியார் பணிக்கக் கேட்டிருக்கை. தமிழ்க் கோசங்களிலும் "அல்லகம் ..கௌபீநம்" என்று காண்கிறது. இங்கு தேசிக ஸ்ரீ ஸூக்தி சைலியை ஆழ்ந்து நோக்குமிடத்து அலம் என்கிற பதம் ஆவச்யக மாயிருப்பதுமுணர்க.

அயத்நம்—அவித்யாமாந: யத்ந: யஸ்ய தத், அநாயாஸலப்த மிதியாவத். "படச்சரம் ஜீர்ணவஸ்த்ரம் கச்சரம் மலதூஷிதம்" இத்யமர. 'அஹோஹத்யத்புதே கேதே' இதி ச அமர குக்ஷித: குக்ஷித: என்றவிடத்தில் ப்ராஸம் ரஸிக்கத்தக்கது ஒன்றில் ஸார்வவிபக்திகஸ்தஸில்ப்ரத்யய; குக்ஷிநிமித்தமித்யர்த்த; மற்றொன்றில் குக்ஷிச்சப்தோ த்விதியா பஹுவசநாந்த: "ராஜ்மு ராட் பார்த்திவக்ஷ்மாப்ருந்ருப பூபமஹீக்ஷித:" என்ற அமரகோசத்தில்படிக்கப்பட்டுள்ள மஹீக்ஷித்சப்தத்திற்கு இது பர்யாயம். "கோத்ரா கு ப்ருதிவீ ப்ருத்வீ" என்ற அமரகோசத்தின்படி கு என்னுஞ் சொல் ப்ருதிவிக்கு வாசகமாதல் அறிக கும் க்ஷிபதீதி குக்ஷித்; க்ஷி-நிவாஸகத்யோ; இதி தாது:. அதவா கௌ (பூம்யாம்) க்ஷியதீதிவா க்ஷி-க்ஷயைச் வர்யயோரித்யபி தாது;. ... ... -- ... 2

ஜ்வலது ஜலதிக்ரோட க்ரீடத் க்ருபீட பவப்ரபா
ப்ரதிபட படுஜ்வாலாமாலாகுலோ ஜடராநல;.
த்ருணமபி வயம் ஸாயம் ஸம்புல்ல மல்லிமதல்லிகா
பரிமலமுசா வாசா யாசாமஹே ந மஹீச்வராந் 3

(கருத்து) கடலினிடையே களித்து வர்த்திக்கின்ற (பாடபாக்நி யென்னப் படுகிற) நெருப்பினுடைய ஜ்வாலைக்குள் தோள் தீண்டியாகவும் (எவ்வளவு பக்ஷ்யவர்க்கங்களையும் ஒரு நொடிப்பொழுதில் கொள்ளை கொள்ள வல்ல) ஸாமர்த்திய முடையதாயுமிருக்கின்ற ஜ்வாலாபுஞ்ஜங்களினால் வ்யாப்தமாயிருக் கின்ற ஜாடராக்நியானது (தாராளமாக) எரியட்டும். (எவ்வளவு கொடிய பசி மிகுந்தாலும்) மாலைப் பொழுதில் மலர்ந்த சிறந்த மல்லிகைப்பூவின் நறுமணத்தை வீசுகின்ற வாக்கினால் அரசர்களிடத்தில் நாம் ஒரு சிறு புல்லையும் யாசிக்க மாட்டோம்.

கடலினிடையே அபாரமான கடல் நீரைப் பருகிக்கொண்டு படபாமுகாக்நி யிருப்பதாக நூற்கொள்கை. அதனால் தான் கடல் நீர் புறம்பு போகாமல் ஒரு மர்யாதையிலே நிற்பதாகவும் கூறுவர் அப்படிப்பட்ட படபாக்நி போலவே நம்முடைய ஜாடராக்நியும் எவ்வளவேனும் படர்ந்து எரியட்டும்; (அதாவது) எவ்வளவு தீவ்ரமான பசி பொறுக்க வொண்ணாதபடி நலிந்தாலும் நலியட்டுமென்றபடி 'புலி பசித்தாலும் புல்லைத் தின்னாது' என்னுமாபோலே அந்த நிலைமையிலும் என் நாவிலின்கவி யாதொருவர்க்குங் கொடுக்கவில்லையென்கிறார் பின்பாதியில். மல்லிகை மலரின் பரிமளம் எவ்வளவு கொண்டாடத் தகுந்ததோ அவ்வளவு கொண்டாடுதற்குரிய நம் வாக்கு எம்பெருமான் தவிர மற்ற விஷயத்தில் ப்ரஸரிக்க மாட்டாது; அருமருந்தன்ன வாக்கைக்கொண்டு நீசரானவர்களிடத்தில் ஒரு த்ருணமும் யாசிக்க மாட்டோம் என்றதாயிற்று. விஷயகௌரவத்தைப் பற்றத் தம் வாக்கைத் தாமே புகழ்தல் ஏற்கும். இது தற்புகழ்ச்சிக் குற்றத்தின் பாற்படாது.

க்ரோட சப்தோ லக்ஷணயா மத்யப்ரதேச வாசக; க்ருபீடபவ — அக்நி — க்ருபீடயோநிர்ஜ்வலந; இத்யமர;. அக்நேராப இதி ச்ருதிச் சாயயா ஜலஸ்ய உத்பத்திபூமிரிதி யாவத். ப்ரதிபடா — ஸத்ருசீ "ப்ரதி பக்ஷப்ரதித்வந்த்வி ப்ரத்யநீக விரோதிந;" இதி ஸத்ருச பர்யாயே தண்ட்யபிதாநாத் [மல்லிமதல்லிகா] "மதல்லிகா மசர்ச்சிகா ப்ரகாண்ட முத்தகல்லஜௌ. ப்ரசஸ்தவாசகாந்யமூநி" இத்யமர யாசதாதோ; த்விகர்மகதயா த்ருணம், மஹீச்வராந் இதிகர்மபதத்வயம்.

தூரீச்வரத்வார பஹிர் விதர்த்திகா துராஸிகாயை ரசிதோய மஞ்ஜலி:
யதஞ்ஜநாபம் நிரபாயமஸ்தி மே தநஞ்ஜய ஸ்யந்தந பூஷணம் தநம் 4

(கருத்து) அஹங்காரமே வடிவெடுத்த கெட்ட ப்ரபுக்களுடைய வாசல் திண்ணையில் துவண்டிருக்குமிருப்புக்கு இதோ ஒரு கும்பீடு கொடுக்கப்பட்டது. (அப்படிப்பட்ட நிலைமை வேண்டாமென்றபடி.) ஏனெனில், அர்ஜுநனுடைய தேருக்கு அலங்காரமாய் மைபோன்ற நிறமுடையதாய் அழிவற்றதான (கண்ணபிரானென்கிற) செல்வம் எனக்கு உள்ளதன்றோ?

அஹங்காரிகளான அரசர்களைக் காணவேண்டிச் செல்லுமவர்கள் வாசல் திண்ணையிலே யிருந்துகொண்டு 'மஹாப்ரபுவை இப்போது ஸேவிக்க நேருமோ?' என்று கேட்பதும் அங்குள்ள சேவகர்கள் 'நித்ராதிஸ்நாதி புங்க்தே சலதி கசபரம் சோஷயத்யந்தராஸ்தே தீவ்யத்யக்ஷைர் ந சாயம் கதிதுமவஸர; ஸாயமாகச்ச கச்ச' என்றாற் போலே திரஸ்கரிக்கவுமாய்ப் படும்பரிபவங்கள் நமக்குக் கனவிலும்

நேரவேண்டா என்கிறார். "ரசிதோயமஞ்ஜலி: என்றது அதிலுள்ள ஜுகுப்ஸை யைக் காட்டினபடி. இங்ஙனம் சொல்லுதல் கவிமரபு. "மஹ்யம் நமோஸ்து கவயே நிரபத்ரபாய" என்றார் ஆளவந்தாரும்.

பிரபுக்களை ஸேவியாவிடில் சரீரபோஷணம் முதலியவை எங்ஙனே நடைபெறுமென்ன; 'யோக க்ஷேமம் வஹாம்யஹம்' என்று தேர்த்தட்டிலே நின்று ப்ரதிஜ்ஞை பண்ணின பெருமானே நமக்கு அழியாச் செல்வமாதலால் அப்படிப் பட்ட பெருமானாலேயே நித்ய ஸ்ரீமான்களான நாம் பிறர்மனை திரிதந்துண்ண வேண்டிய கடப்பாடு உடையோமல்லோம் என்றாராயிற்று. அஞ்ஜநாபம் நிரபாயம் என்ற இரண்டு விசேஷணங்களும் ப்ரஸித்ததனவ்யாவர்த்தகம். வெளுத்த ரூப்யமாயும் அழிந்துபோவதாயு மிறே உலகத்திலே தனமுள்ளது; இங்ஙனன்று காணும் தெய்வத்தேரினில் கீதை செப்பிய எங்கள் தனம் என்கிறார் நிரபாய மென்றவிடத்து "உத்காட்ய யோககலயா ஹ்ருதயாப்ஜகோசம் தந்யைச்சிராதபி யதாருசி க்ருஹ்யமாண; ய: ப்ரஸ்ப்புரத்யவிரதம் பரிபூர்ணரூப; ச்ரேயஸ்ஸ மே திசது சாச்வதிகம் முகுந்த:" என்ற அப்பய தீக்ஷிதருடைய ச்லோகம் நினைக்கத் தகும். யோகக்ஷேமம் வஹாம்யஹம் என்ற பகவத் ப்ரதிஜ்ஞையையே நம்பியிருக் கிறோமென்று காட்டுவதற்காகவே ஸ்யந்தந பூஷணம் எனப்பட்டது. ... ... (4

சரீரபதநாவதி ப்ரபுநிஷேவணாபாதநாத்
அபிந்தநதநஞ்ஜயப்ரசமதம் தநம், தந்தநம்,
தநஞ்ஜயவிவர்த்தநம தநமுதூட கோவர்த்தநம்
ஸுஸாதநமபாதநம் ஸுமநஸாம் ஸமாராதநம். 5

இந்தவுடல் விழுமளவும் அரசர்களை அநுவர்த்திப்பதாகிற ஆபத்திற்குக் காரணமாய்க்கொண்டு ஜாடராக்நிக்கு சாந்தியைத் தருகின்ற பொருள் பாழாகுக அது நமக்கு வேண்டா. அர்ஜுநனை அபிவ்ருத்தி செய்ததும், கோவர்த்தன மலை யைக் கொற்றக் குடையாகத் தாங்கி நின்றதும் தேவதைகளுக்குப் பரமத்ருப் தியை அளிக்கவல்லதும், எதையும் நாம் அடைவதற்குச் சிறந்த ஸாதநமானதும் தன்னை நம்பினார்க்கு ஒருவகையான தீங்கையும் தரமாட்டாததுமான செல்வ மன்றோ செல்வம் அதாவது திருவுக்குந் திருவாகிய செல்வம். அதுவிறே நமக்குள்ளது

க்ஷுத்ரப்ரபுக்களைப் பணிந்து பொருளீட்டுமவர் தங்கள் ஆயுள் உள்ளவளவும் அவர்களைப் பணிந்தே தீரவேண்டும் பொருளீட்டுவதற்கு முன்பு அவர்களைப் பணிந்தேயாக வேண்டுமென்பது நிர்விவாதம். அபாரமான பொருளை

ஆர்ஜித்து விட்டு விலகிவிடலாமேயென்னில் அதுவுமாகாது; ஆர்ஜித்த பொருளுக்கு அபாயம் விளையாதபடி அடிக்கடி அவர்களை உபஸக்தி செய்தாகவேண்டும். ஆகவிப்படி யாவஜ்ஜீவம் ஸ்வரூபநாசத்தை ஸஹித்துக் கொண்டு பொருள் படைப்பது இந்தப்பாழும் வயிற்றுக்காகவே யாதலால் அப்படிப்பட்ட பொருள் நமக்குத் தேவையில்லை. சரீரயாத்ரை ஆத்மயாத்ரை என இரண்டையும் நிர்வஹிக்கவல்ல பரம்பொருள் நமக்குக் கைப்பட்டேயிருக்கின்றது என்கிறார்.

அபிந்தந தநஞ்-ஜய:; ஜாடராக்நியைச் சொல்லுகிறது. ஆப: இந்தநம் யஸ்ய ஸ; இங்கு ஆப: என்றது அந்நத்திற்கும் உபலக்ஷணம். சோறுந்தண்ணீரும் எதிர் பார்க்கிற அக்நி என்றபடி. தநஞ்ஜயசப்தம் அக்நிக்கும் அர்ஜுனனுக்கும் பெயர் இங்கு அக்நியையும், மூன்றாம் பாதத்தில் அர்ஜுனனையும் சொல்லுகிறது. தந்தநம் என்பது அஸார மென்றபடி திக் என்கிற ஸ்தானத்தில் தந்தந மென்கிறது என்பாருமுளர் இங்கு பூர்வார்த்தத்தில் அக்ஷராநுப்ராஸத்தில் தந சப்தம் நான்கு தடவை வந்திருக்கிறது; மேல் உத்தரார்த்தத்தில் இப்பதமே ஏழு தடவை வந்திருக்கிறது. இதனால் எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் துணையாக நிற்கும் தனம் அதுவே யென்று த்வநிப்பித்தபடி இந்த ச்லோகத்தில் பல்வகை யான அர்த்த விசேஷங்கள் தொனிக்கும். அறிவுடையார் ஆழ்ந்து அறிக

(தநஞ்ஜய விவர்த்தநம்) ''தநஞ்ஜய ப்ரசமநம் தநம்'' ''என்று கீழ்ச் சொன்னபடியே தநஞ்ஜயசாந்தி ப்ரதமான தநம் போலன்றியே இது தநஞ்ஜய வ்ருத்திகர மென்கிறார் [உதாடகோவர்த்தநம்] எடுத்து வஹிக்கப்பட்ட கோவர்த்தன மலையையுடையது திருவாய்ப்பாடியில் கண்ண பிரானுடைய அதிமாநுஷ சீலவ்ருத்த வேஷங்களைக் கண்டு ஆயர்களனைவரும் இவனே நம்குலககொழுந்து; இவன் கட்டளைப்படியே நாம் நடக்க வேண்டும். என்று அறுதியிட்டிருந்தனர்; அங்ஙனமிருக்கையில் சரத்காலம் வந்தது அப்போது இடையர்கள் வருஷந்தோறும் நடத்துவது போல் வழக்கப்படி இந்திரனுக்குப் பூஜை செய்யப் பற்பல வண்டிகளில் சோறும் தயிரும் நெய்யும் காய்கறிகளும மற்றுமுள்ள பூஜாத்ரவ்யங்களுமாகிய இவைகளைச் சேகரிப்பதைக் கண்டு க்ருஷ்ணன் 'ஓ பெரியோர்களே! நாமும் நம்முடைய பசுக்களும் எதனால் ஜீவிக்கிறோமோ அதற்கே பூஜை செய்வது தகுதி. இக்கோவர்த்தந கிரியே பசுக் களுக்குப் புல்லுந்தண்ணீரும் கொடுத்துக் காப்பாற்றுகின்றது; இந்திரனால் நமக்கு என்ன பயனுண்டு, ஒன்றுமில்லை. ஆகையால் நீங்கள் இப்பூசனை யனைத்தையும்

இம்மலைக்கே இடுங்கள்' என்ன, இடையர்கள் இதைக்கேட்டு அங்ஙனமே செய்ய, கண்ணபிரான் தானே தேவதாரூபங் கொண்டு அவற்றை முற்றும் அமுது செய்தருள, அவ்விந்திரன் கோபத்தோடு புஷ்கலாவர்த்தம் முதலிய பல மேகங்களை ஏவி, கண்ணன் விரும்பி மேய்க்கிற கன்றுகளுக்கும் பசுக்களுக்கும் கண்ணனுக்கும் இஷ்டரான இடையர்க்கும் இடைச்சியர்க்கும் தீங்கு தரும்படி கல்மழையை ஏழுநாள் இடைவிடாது பெய்வித்தபொழுது கண்ணன் கோவர்த்தன மலையையெடுத்துக் குடையாகப் பிடித்து மழையைத் தடுத்து எல்லாவுயிர்களையுங் காத்தருளினன் என்ற வரலாறு இங்கு உணர்க.

உதூடகோவர்த்தநம் என்றவிதில் மற்றொரு பொருளும் தொனிக்கும் அதாவது நாநார்த்தமான கோசப்தத்திற்கு வாக்கும் அர்த்தமாதலால் வாக்கின் வ்ருத்தியையும் நிர்வஹிப்பது இந்த தநமென்கை. வயிற்றை வளர்க்கிற தனம் அது; வாக்கை வளர்க்கிற தனம் இது என்று ரஸோக்தி. [ஸுஸாதநம்] ஐஹிகங்களானக்ஷுத்ர பதார்த்தங்களை மாத்திரம் வாங்குவதற்கே அது ஸாதனம் ஆமுஷ்மிகங்களான சிறந்த ச்ரேயஸ்ஸுக்களுக்கும் இது ஸாதனம்; என்றவாறு சோபநாநி ஸாதநாநி யஸ்ய தத் என்று பஹுவ்ரீஹியாய் பக்திப்ரபத்திகள் முதலிய சிறந்த ஸாதனங்களையுடையது என்றும் விவக்ஷிதம். அந்த தனத்தின் ஸாதனங்கள் (ஆர்ஜநோபாயங்கள்) ஹேயமென்று காட்டியபடி (அபாதநம்) கொள்ளக் கொள்ளக் குறையும் அது; * கொள்ளமாலவின்ப வெள்ளம் இது; ஜ்ஞாதிகள் கள்ளர் முதாலானவர்களால் கொள்ளை கொள்ளப் படுகையாகிற பாதங்களும் இதற்கில்லை. அதாயாதவிபாகார்ஹமபூபதிவசம்வதம். அதஸ்கரகரக்ராஹ்யமப்ரமேயம் தநம் ஹி ந:. (ஸுமநஸாம் ஸமாராதநம்) அறிவுடையார்க்கும் அமரர்க்கும் பேரின்பம் பயக்குமென்றபடி. இப்படிப்பட்ட சீரிய பொருளாக ஸ்வாமி விவக்ஷிக்கும் தனம் இன்னதென்பது விளங்க விசேஷ்யநிர்த்தேசமில்லாவிடினும் விசேஷணப் பொருத்தங்களாலே எம்பெருமானாகிற பரம் பொருளே அது என்பது வெளிப்படை. ... (5)

நாஸ்தி (மே) பித்ரார்ஜிதம் கிஞ்சித் ந மயா கிஞ்சிதார்ஜிதம்,
அஸ்தி மே ஹஸ்திசைலாக்ரே வஸ்து பைதாமஹம் தநம். (6)

எனக்குத் தகப்பனார் சேமித்து வைத்த பொருளுமில்லை; நானும் ஒரு பொருள் படைத்திலேன், ஆயினும் திருவத்திமாமலையுச்சியில் பிதாமஹார்ஜிதமான செல்வம் என்னுடைய பொருளாக இருக்கின்றது. இந்த ச்லோகத்தின் அமைப்பு மிக அற்புதமும் சுவை மிக்கதுமாம். உலகில் அவரவர்கள் தாம் வருந்தி ஆர்ஜித்தம் பொருள் ஆயாஸபலமாகையாலே தமக்கு த்ருப்தியைத் தாராது.

பிதாவின் ஸ்வயமார்ஜித தநம் இருக்குமாகில் அதை ஸ்வச்சந்தமாக விநியோகிக்கப் பிதாவுக்குப் பூர்ணாதிகார முண்டாதலால் அதை நியமேந எதிர்பார்த்திருக்கப் புத்திரனுக்குப் ப்ராப்தியில்லை இவ்விரண்டு வகையுமின்றிக்கே பிதாமஹார்ஜித தனம்இருக்குமாகில் அதுவே நிர்ப்பராநந்தஸந்தோஹஸந்தாயகமாகும். அந்த பைதாமஹதனத்தைப் பிதா துர்விநியோகப்படுத்தினாலும் ந்யாயாலயம் மூலமாகத் தடை செய்து ஸ்வாநுபாவ்யமாகக் கொள்ள உரிமையுண்டு. ஆகவே பைதாமஹம் தநம் மிகச்சிறந்ததென்று அனைவரும் இசைய வேண்டுதலால் அப்படிப்பட்ட தனம் எனக்குக் 'கரிகிரிமேல் நின்றனைத்துங் காக்கின்றானே'' என்னும்படியாகப் பேர்க்கவும் பேராதபடிவாரணவெற்பில் சேமவைப்பாக இருக்கின்றமையால் நச்வரமான பொருளைத் தேடி நீசர்மனைக் கடையிலே துவளவேண்டிய கடப்பாடு நமக்குச் சிறிதுமில்லையென்று தலைகட்டினாராயிற்று. ''மலை மேல்தான் நின்று என்மனத்துளிருந்தானை நிலைபோக்கலாகாமை நிச்சிந்திருந்தேனே'' என்கிற பாசுரத்தை இங்குச் சேர்த்து ரஸாநுபவம் செய்க ※ கரிசிகரி விடங்கஸ்த்தாயிந: கல்பவ்ருக்ஷாத் பவதி பலமசேஷம் தஸ்ய ஹஸ்தாபசேயம் ※ என்ற ஸ்வாமி ஸூக்தியையும் இங்கு இணைக்கத்தக்கது.

(பைதாமஹம் ''பரமேஷ்ட்டீ பிதாமஹ:'' என்ற அமரகோசத்தின்படி பிதாமஹனென்றது நான்முகக் கடவுளை, அவர் ஆர்ஜித்த பொருள் பேரருளாளப் பெருமான் என்பது ஹஸ்திகிரி மாஹாத்மியத்தில் விசதம். பத்மயோநேஸ்துரக ஸவநவேத்யாம்சயாமலோ ஹவ்யவாஹம் ※ ஹைரண்ய கர்ப்பஹயமேத ஹவிர்புஜம் த்வாம் ※ இத்யாதிகளும் காண்க. ஆகவே பைதாமஹமென்றதில் ச்லேஷம்.

முதலடியில் ந மே பித்ரார்ஜிதம் கிஞ்சித் என்று பெரியாருடைய பாடம் ஆக இந்த வைராக்ய பஞ்சகத்தினால் ஸ்வாமி தம்முடைய ஒப்புயர்வற்ற பாரமைகாந்த்யத்தையும் பேரருளாளன் பதவிணையிற் பொருந்திய ப்ராவண்யாதிசயத்தையும் ப்ரகாசிப்பித்தருளினாராயிற்று. ... ... *

வைராக்ய பஞ்சகம் முற்றிற்று.

# அத்திவரதர் ஸேவை ஸாதிக்கிறார்

தேவப்பெருமாள் ஸன்னிதியினுள் அனந்த புஷ்கரிணியில் அனேக ஸம்வத்ஸரமாக உள்ளே சயனித்திருப்பவர் அத்திவரதர். இப்பெருமாள் என்ன காரணத்தினால் ஜலாதிவாஸம் செய்து வருகிறார் என்பதை உண்மையாக அறிந்து சொல்லவல்லாரில்லை. திருமேனியில் தாபமுண்டாகி "என்னைத் தீர்த்தத்தினுள்ளே சேர்த்து விடுங்கள்" என்று கனவிலே நியமித்தருளினதாகப் பெரியார் கூறுவர் இப்போது திருவத்திமாமலையில் ஸேவை ஸாதிக்கிற மூல மூர்த்தி சீவரம் மலையிலிருந்து எழுந்தருளச் செய்யப்பட்டவர் என்றும் கூறுவர் அத்திமரத்தினலான திருமேனி யென்பதுபற்றி அத்திவரதர் எனப்படுகிறார் என்பது பாமரர்கள் பேசுமது. ஹஸ்திகிரி வரதர் என்பதே உண்மைத் திருநாமம். புஷ்கரிணிக்கு எதிரேயுள்ள வஸந்த மண்டபத்தில் 1—7—79 தேதி முதலாக எழுந்தருளியிருக்கிறார் இன்னும் ஒரு மாஸகாலம் இப்படி ஸேவை ஸாத்திதருளி மீண்டும் முன்போல் புஷ்கரிணியினுள்ளேயே எழுந்தருளியாகும் உத்ஸவாதிகளுக்கு ஈஷத்தும் ப்ரஸக்தியில்லை. இப்போது சயனத்திருக்கோலமாக ஸேவை ஸாதிக்கிறார். கடைசியில் இரண்டொருநாள் நின்ற திருக்கோலமாக ஸேவை ஸாதிப்பரென்கிறார்கள். பற்பல நாடுகளிலிருந்தும் ஸேவார்த்திகள் குழாங்கூடி வந்து ஸேவித்துக் கொண்டிருக்கிறார்கள்.

நித்யஸ்ரீர் நித்ய மங்களம்.

---

# உ.வே. கற்பூரம் பட்டப்பாஸ்வாமி பரமபதித்தார்.

ஸ்ரீபெரும்பூதூரில் விக்க்யாதராக எழுந்தருளியிருந்த ஸ்ரீமதுபயவே அஷ்டகோத்ரம் வேங்கடாசார்ய ஸ்வாமியென்கிற கற்பூரம் பட்டப்பாஸ்வாமி இரண்டு மூன்று ஸம்வத்ஸரமாகத் திருமேனி பாங்கில்லாமல் அசக்தராய் எழுந்தருளியிருந்து ஆனி மாதம் சுக்லபக்ஷ நவமியன்று தமது திருமாளிகையில் திருநாடலங்கரித்தது வைதிகவுலகுக்குத் தீராத துயரமாகும் உபயவேதங்களிலும் நிகரற்ற மஹாநிபுணராய் ஸ்ரீபெரும்பூதூருக்குத் திலகமாக எழுந்தருளியிருந்தார். இவருடைய ஸ்தானத்தைப் பூரிப்பவர் கிடைப்பதரிது. வைணவவுலகம் ஒரு மஹாரத்னத்தை இழந்து விட்டதென்றே சொல்லவேணும். ... ...

---

**சிறுகுறிப்பு:** அச்சுக்காகிதத்தின் விலையேற்றம் தௌர்லப்யம், அச்சுக்கூடத்தின் அஸௌகரியம் முதலான காரணங்களினால் பத்ரிகையின்வெளியீடு தாமதிக்கிறது. இந்தக்கிலேசம் விரைவில் தீரவேணும் ... ... காரியதரிசி.